அப்படி இருந்தால் அதன் காரணம் என்ன என்பதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்து பார்த்ததா? எதிர்பார்த்த அளவுக்கு வரவில்லை என்றால் அதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதையும் அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எந்த அளவுக்கு டார்ஜட் போட்டோமோ அந்த அளவுக்கு பலன் கிட்டவில்லை என்றுதான் அவர் சொல்லி இருக்கிறார். குறுகிய கால, நடுத்தர கால விவசாயத்தில் எந்த அளவிற்கு நாம் பலன் எதிர்பார்க்க லாம் என்று திட்டம் போட்டிருந்தோமோ அந்த அளவுக்கு வர வில்லை என்றுதான் அவர் சொல்லி இருக்கிறார்.

*Krishnarayapuram Panchayat*

*2132 *Q*.—SRI N. MARUDACHALAM: கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) கோவை ஜில்லா கிருஷ்ணராயபுரம் பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சாயத்து சட்டத்திற்கு விரோதமாய் நடந்ததாக மேற் படி பஞ்சாயத்து மெம்பர்கள் 12—5—1961, 21—2—1961 தேதி களில் சர்க்காருக்குப் புகார் செய்துள்ளார்களா?

(இ) அதன்மேல் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Only a petition, dated 21st February 1961 from four members of the Krishnarayapuram Panchayat alleging certain irregularities on the part of the President of the above panchayat was received by the Inspector of Municipal Councils and Local Boards, Madras.

(இ) As it is found that there is faction and deadlock in panchayat administration of the Krishnarayapuram Panchayat, the question of taking appropriate action is under the consideration of Government.

SRI N. MARUDACHALAM: கிருஷ்ணராயபுரம் பஞ்சாயத்துத் தலைவர்மீது அந்த பஞ்சாயத்து மெம்பர்கள் புகார் செய்திருக்கிறார்கள். அந்தப் புகார்களின் விவரம் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒரு கட்சி எதிர்க்கட்சி யின் மீது செய்யக்கூடிய புகார்தான். அப்படியேதான் புகார் இங்கேயும் செய்யப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யும். அதுவும் சரியில்லை என்று தோன்றினால் அதைப்பற்றி மீண்டும் பரிசீலனை செய்து பஞ்சாயத்து சட்டப் பிரகாரம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமோ அந்தப்படி எடுத்துக்கொள்ளப்படும். அதைப்பற்றியும் அரசாங்கம் பரிசீலனை செய்து பார்க்கும்.